# ஸ்ரீ பகவத் கீதை



பரமாச்சார்ய காமகோடி

சங்கராச்சாரியார்

ஆசீர்வாதத்தால்

வெளியிட்டவர்

## ஸ்ரீமதி K. சரஸ்வதி அம்மாள்


21, வில்லியம்ஸ் ரோடு
கண்டோன்மெண்ட்
திருச்சி - 1

விருத்தாச்ரமம்
காளஹஸ்தி-517 644
(ஆந்திரப் பிரதேசம்)


JUNE — 1988

ஸ்ரீ

# பகவத்கீதை

குலதெய்வமான குருவே என் ஆண்டவனே
வடிவே சரணமம்மா வந்தெனக்கு முன்நடவும்
மகிமையுள்ள மாதவரே விநாயகரே வேலவரே
ஸரஸ்வதியே தாயே சரணமென்று வந்தடைந்தேன்
மூஷிகவாகனரே முன்னின்று காத்தருளும்
முக்திதரும் நாயகியே முன்னைவினைதீர்த்தவரே
பக்திரஸம்தந்து பவபயத்தை வேர்அறுத்து
சித்தம்துலக்கி ஜீவன்முக்தர் ஆக்கிவைத்து
எப்போதும் பிர்ஹ்ம்மரஸம் எந்தனுக்குத் தந்தவனே
கர்மவினை வேரறுக்கும் காந்திமதி காமாக்ஷி
உன்றன் கிருபையாலே என்றன் மனம்தெளிந்து
பக்தியுடன்நானிப்போ பகவத்கீதையுரைத்து
(சற்றும்)தட்டுதடைவாராமல் சாந்தமாய்க்கூட்டிவைப்பாய்
சற்குருவே என்றன் ஜனனபயம் தீர்ப்பவரே
ஸ்ரீவேதவ்யாஸரே ஸ்ரீகுருப்ரஹஸ்பதியே
சங்கராசாரியரே சயனித்த ஸ்ரீஹரியே(உங்கள்)
அற்புதமாம் பாதம் அநந்தநமஸ்காரம் ஐயா
எத்திசையும் கீர்த்திகொண்டரிஷீச்வரர் அனைவரேன்
சட்டமுடனே படிக்கும் சாஸ்திரியார்பாகவதாள்
அந்தமறையோநியரேன் அநந்தாசாரியரேன்
கட்டுமட்டாய் வந்தெனக்குக் கதைசொல்ல வேணுமய்யா
திங்களணிசங்கரனே தேவியாம் பார்வதியென்
அண்டமெல்லாம்ஓரடியில் அளந்தஸ்ரீ மாதவனே
நம்பியவர்பாதம் நமஸ்கரித்து நான்பணிந்தேன்
அஞ்சாதே என்று அபயஸ்தங்கொடுத்து
அத்வைதம் சொல்ல அருள்செய்து ரக்ஷித்து

சித்திரம்போல் விளங்கும் சிறுகுழந்தை சொல்லுவதை
பெற்றுகந்தமாதா பிதாக்கள் கேட்பதுபோல்
அப்படியே என்னிடத்தில் ஆதரவாய்ப் பக்ஷமுடன்
எப்படி நான்சொன்னாலும் ஹிதமாகவேகொண்டு
கிருஷ்ண தயாளுவே கிருபைசெய்து முன்னடவும்
விருத்தாந்தமாயிருக்கும் வேதாந்த ஞானியர்க்கு
விகற்பமது சற்றுமில்லை மெய்ப்பொருளாய்க் கண்டவர்க்கு
எடுத்ததெல்லாம் ஐம்பத்தொரு அக்ஷரங்களேயன்றி
மற்றில்லையென்று அறிவார் மஹாத்மாக்கள்
பொருத்தருளவேணுமையா பிழை தப்புவந்தாலும்
ஜகத்தை விளக்கும் ஜகத்பதியே ஆண்டவரே
அநர்த்தங்களை தீர்த்து அபீஷ்டம்நிறைவேற்றி
அர்ஜுனனுக்குஸ்வாமி அனுக்ரஹங்கள் பண்ணிவைத்து
எப்படியோ நானறியேன் ஹிதமாயுரைத்திடவே
ஒத்தாசைபண்ணி உறுதிகொள்ளவே எனக்கு
என்புத்திக் குள்ளேயிருந்து புருஷோத்தமரே நீர்.
கட்டுமட்டாய் வந்தெனக்கு
கதைசொல்ல வேணுமய்யா.



# கீதை ஆரம்பம்

கீர்த்தியுஞ் செல்வமும் சேரத் தந்தருள்
பார்த்தசாரதி யிருபாதம் போற்றுவாம்.

த்ருதராஷ்டரைப்பார்த்து சஞ்சயனுமேதுசொல்வான்
உம்முடைய சேனைகளும் உத்தமனர் ஸேனைகளும்
இருவரின்ஸேனைகளும் இரைஞ்சு திமிதிமென
ஆதாளிமண்டி அதள உதளமிட
தேவதத்தம் பாஞ்ஜன்யம் பலதிசையும் தான்முழங்க
சங்கத்வனியாலே ததும்பி அந்தஸேனையெல்லாம்

அரசரெல்லாம்சேரவந்து அவரவர்கள் தேரேறி
ஆயுதமும்கைபிடித்து(யுத்தத்துக்கு)ஆயத்தமாயிருக்க
எழுதுவைத்த சித்திரம்போல் எல்லோரும் பார்த்திருக்கும்
மணிவண்ணரைப்பார்த்து வாள்விஜயன் ஏதுசொல்வான்

இருசேனை மத்தியிலே என்றனது தேரை
கொண்டுநிறுத்துமென்று கோவிந்தனோடுரைத்தான்
காண்டீபன் சொல்கேட்டுக் கண்ணனும் தேர்நடத்த
நரபதிபோல் பாவித்து ஸ்ரீமந்நாராயணரும்

அலைகடலில் பள்ளிகொள்ளும் ஆதியந்தமற்றவரும்
ஸகலஜகத்துக்கும் ஸ்தாபரமாயிருக்கும்
சச்சிதாநந்தவஸ்து தாமே அவதரித்து
தர்மமொடு அதர்மம் சதுரான ஞானமெல்லாம்

மெய்மறந்துஇப்போ விழுந்துகெட்டுப்போனதென்று
நன்மையொடு வந்துதித்தார் வஸுதேவர் தம்மனையில்
வந்துதித்துப்பக்தர் மனஸ்தாபம் போக்கிவைத்து
அண்டவொண்ணாத் துஷ்டர்களாம் அசுரர்களை ஸம்ஹரிக்க

பொற்கொடியாள் பூமியின் பாரமெல்லாந் தீர்க்கவென்று
செங்கமலே நாயகனுர் தேர்விட்டார் அர்ஜுனர்க்கு
தூதனுமாய் ஸாரதியாய்த் தோழனுமாய் பந்துவாய்
ஆசாரியரரய்குருவாய் அதிஷ்டான தெய்வமாய்

பாவனேபண்ணும் பரிபூர்ணவஸ்துவாய்
மாளாப் பதங்கொடுக்கும் மாசற்றஜோதியாய்
வைகுண்டம் வாழ்பதியை மைத்துனராய்ப்படைத்து
ஆரும்நிகரற்ற அறிவுடைய பாண்டவர்கள்

கண்டபேர் கொண்டாடக் காண்டீபம்கைபிடித்து
தனஞ்சயனும் புஜந்தனிலே தனுஸெடுத்துநாணேற்றி
அதிசூர அர்ஜுனனும் ஆயுதமும்கைபிடித்து
நந்தன்மகன் தேர்விடவே வந்துநடுப்படையில்

வில்லாளி வீரன்விஜயன் எங்கும்பார்க்கையிலே
தன்தந்தை ஸகோதரரும் தன்னுடையபாந்தவரும்
அந்தரங்கத்தோழர்களும் அனேவரும் நிற்கக்கண்டு
கலங்கி நடுங்கியந்தக் காண்டீபனப்போது

கண்ணன்முகம்பார்த்துக் கைகூப்பிச் சொல்லுகிருன்
பொங்கும் கடல்நாதா புருஷோத்தமா கேளும்
இங்கே இவரையெல்லாம் இரத்தவெள்ளம்பெருக
ஸம்ஹரித்து ராஜ்யத்தைத் தாளுத்தேவையில்லே

வந்தவழியேதிரும்பி அந்தநெடுங் கானகத்தில்
எங்கும்திரிந்து இரந்துபிக்ஷைதான்எடுத்து
உண்டுதிரிந்தாற்போதுமய்யா உலகளந்தமாதவரே
எங்கும்படர்ந்த எதிரிதன்னே கொல்லவென்று

வந்தெதிர்த்த யுத்தத்தில் மனஞ்சலித்தால் தோஷமுண்டு
கண்டித்தெனேக்கேட்டால் கேளுமையா காரணரே
கொண்டாடிப் பூஜிக்கும் குருவும் பிதாமஹரும்
மாமனும் மைத்துனனும் வாஞ்சை உயிர்த்தோழரும்

பேரனும் பிள்ளைகளும் பிரியவொண்ணுப் பந்துக்களும்
ஏழுகடலைப்போல் எண்ணிறந்த ஸேனையெல்லாம்
சேரஇப்போ ஸம்ஹரித்து சீமையெல்லாம் ஆளஇப்போ
ஏதுபலமெனக்கு எழுதரிய மேனியரே

தேவயில்லை தேவயில்லை சீமையாள ஆசையில்லை
மண்டலத்திலாசையில்லை பாணம் எடுப்பதில்லை
காண்டீபம் கைநழுவக் கண்கலங்கிச் சோர்ந்துவிட்டான்
தேவரே உம்முடைய திருவுளத்திற்கேற்றபடி

தாஸன்நான்கேட்பேன் ஸர்வக்ஞரே என்று
ஆயுதத்தைக் கீழ்போட்டு அச்சுதனுர் சேவடியில்
சோகமுடனேவிழுந்தான் சூரனந்த அர்ஜுனனும்
அதையறிந்தெம்பெருமான் அர்ஜுனனைத் தான்பார்த்து

பண்ணவந்த யுத்தத்தைப் பண்ணுமல் இப்போது
(நீ)விடுவது நீதியல்ல இக்கருமம் செய்யாமல்
மாயையினுலேயுன் மனஸைக்கலங்கவைப்பேன்
மோஹத்தையேவிக் கொல்லவைப்பேன் என்று சொல்லி

அண்டையிலே போய்நின்று அர்ஜுனனைத் தான் பார்த்து
சேயகனி வாய்திறந்து ஸ்ரீ கிருஷ்ணன் ஏதுசொல்வார்
இழிவான இச்சோகம் இப்போது வரலாமோ
சோகப்படாதவர்க்குச் சோகப்படத்தகுமோ

ஆத்மாவுக்கொருபோதும் அழிவில்லை சாவுமில்லை
பழையதொரு வஸ்திரத்தை ஜீர்ணமென்று எடுத்துவிட்டு
புதிதானவஸ்திரத்தை நாம்தரித்துக் கொள்வதுபோல்
ஆத்மாவும் வேறுபுது சரீரத்திலேபுகுவன்
ஆதலினுல் சோகத்தை அர்ஜுனுவிட்டுவிட்டு

ஜயாபஜயத்தைச் சற்றும் நினைக்காமல்
யுத்தம்நீசெய்திடுவாய் உலகம் உனைப்புகழ
இதுவேதான் ராஜதர்மம் என்றுரைத்தார் அச்சுதனுர்(என்)
வீபூதிமகிமைதன்னை விஜயா உனக்குசொல்வேன்

தீபப்பிரகாசம்வந்து ஜெகமெல்லாம் தோற்றுமாப்போல்
ஆத்மாப்பிரகாஸம் அடங்கலும் நாமாக்கும்
அநேககோடி பிர்மாண்டம் அகிலஜகமத்தனையும்
அந்தரிக்ஷம்ஸ்வர்க்கம் அகிலாண்ட லோகமெல்லாம்

அநேகதேகபூதம் பிரபஞ்சங்க ளத்தனையம்
அண்டபிண்டமெல்லாம் அடங்கலும் நாமாக்கும்
ஆறுகளும் வாய்க்காலும் அருவிகளும் பர்வதமும்
கங்கைமஹா நதிகளும் கீழுலகும் மேலுலகும்

ஸப்தஸமுத்திரமும் ஸகலரும் நாமாக்கும்
அஸ்வமொடுயானை உச்சைச்ரவ முதலாய்
ஐராவதமும் கஜேந்திரமும் நாமாக்கும்
பாரிஜாதவிருக்ஷமும் பார்வையுள்ள நெல்லியும்

கல்பகவிருக்ஷம்துளஸி காமதேனு முதலாய்
அச்வத்தவிருக்ஷம் அடங்கலும் நாமாக்கும்
அக்கினிமண்டலமும் ஆதித்ய மண்டலமும்
சந்திரமண்டலமும் ஸகலமும் நாமாக்கும்

ஆகாசத்திலேபறக்கும் அநேகவித பக்ஷிகளில்
சக்ரவாள கோகிலங்கள் சாருமம்ஸபக்ஷி
பக்ஷிகளில்சிறந்த கருடனும் நாமாக்கும்
வேதவ்யாஸர் விளங்கும் கபிலரிஷி

வஸிஷ்டர் மார்க்கண்டேயர் மற்றுமுள்ளதேவரிஷி
அகஸ்தியமஹாமுனியும் அந்தணரும் நரமாக்கும்
அந்தரங்கபக்தர் அநேகமாம் ராஜரிஷி
பராசரர்சுகர்பீஷ்மர் பக்திகொண்ட ருக்மாங்கதர்

அம்பரீஷர்விபீஷணர் அதிபலி சக்ரவர்த்தி
தும்புருநாரதரும் தோணுநல்ல யோகியரும்
ஸநகாதியோகியரும் சாந்தியுள்ள அநந்தபக்தர்
பக்தர்களுக்குள்ளே ப்ரஹலாதன் நாமாக்கும்

வேதத்துக்குள்ளே சாமவேதம் நாமாக்கும்
அக்ஷரத்துக்குள்ளே அகாரம் நாமாக்கும்
கானல்ஜலம்போலே காணுவதும் நாமாக்கும்
சுத்தஜலம்போலே தோன்றுவதும் நாமாக்கும்

மேனகையும் ஊர்வசியும் மிக்கநல்ல திலோத்தமையும்
ரம்பையொடுதேவ அப்ஸரஸும் நாமாக்கும்
கின்னரர்கிம்புருடர் கந்தர்வர் அஷ்டசித்தர்
வித்வாம்சராக விளங்குவதும் நாமாக்கும்

மீனுகி ஆமையுமாய் மிக்கவராகமுமாய்
தூண்பிளந்து அவதரித்த நரசிம்மர் நாமாக்கும்
காச்யபருக்குப் புத்திரராய்க் கல்யாணஸுந்தரராய்
மகாபலியின்சாலையிலே மண்ணளந்தார் நாமாக்கும்

ஸத்யப்ரதிக்ஞைபண்ணி க்ஷத்திரியகுலம் வேரறுத்து
பார்க்கவகுலத்துதித்த பரசுராமர் நாமாக்கும்
தசரதர்க்குமைந்தனுமாய் ஸ்ரீநகர் அயோத்தியிலே
மனுஷ்யாவதாரமாய் வந்ததும் நாமாக்கும்

வஸுதேவர்தேவகிக்கு மைந்தருமாய் யதுகுலத்தில்
த்வாரகையில் கிருஷ்ணருமாய்த் தோன்றியதும் நாமாக்கும்
கைத்தலத்தில்வில்ரூபக் காண்டீவம் நாமாக்கும்
யுத்தத்திற்குள்ளே ஜயிக்கிறதும் நாமாக்கும்

தசேந்திரியங்களுக்குள் புத்திக்குள் சாக்ஷியுமாய்
ப்ரக்ஞானசக்ஷீவாய்ப் பார்க்கிறது நாமாக்கும்
அந்தக்கரணசுத்திக்கும் அநுஸூயை சாக்ஷியுமாய்
அயம்ஆத்மாவென்று அறிகிறதும் நாமாக்கும்

ஸத்யமும் அஸத்யமும் தர்மமும் நாமாக்கும்
ஸத்துச்சித்தாநந்தம் தாமாய் நிறைந்துகொண்டு
ஆனந்தந்தன்னை அடைவதும் நாமாக்கும்
ஸப்தஸ்பரிசரூப ரஸகந்த முதலான

ஐந்திரியங்களினுல் அறிகிறதும் நாமாக்கும்
பஞ்சேந்திரியங்களினுல் பார்க்கிறதும் நாமாக்கும்
அறிவுக்குள்ளறிவாகி விசாரிக்கும் பேர்களுக்கு
அறிவுக்குள் அணுவாகி அமர்ந்திருப்பேன் ஆத்மாவில்

காணப்படுவதெல்லாம் (எம்)கல்பித மாயையென்று
தோணப்படுவதெல்லாம் துச்சமென்றே அறிந்து
பார்த்தனுக்குச்சொல்லிப் பரமகிருபை யாளரங்கே
நிர்மலமான விஸ்வரூபம் காட்டிநின்ருர்

திரும்பாமல்பாருமென்று திவ்யசக்ஷுதான் கொடுத்தார்
ப்ரக்ஞானசக்ஷுவால் பார்த்தான் தனஞ்சயனும்
(ஸ்வாமி) பூலோகம் பாதாளம் புவனம்பதினுலும்
தன்னேயும்கண்டான் தனஞ்சயனும் அவருடம்பில்

தாஞகக்கண்டான் தழைந்தபிரபஞ்சங்க ளத்தனேயும்
வானுலகதேவர்அவர் மயிர்க்கா லடிகள்தோறும்
பிர்ம்மாஸரஸ்வதியும்(அவர்) ப்ரளயஜலத்திலே தெரிய
ருத்திரனும்கங்கை உமையாள் திருமகளும்

சித்திவிநாயகரும் தாமாய் நிறைந்திருந்து
கருடபகவான் அனுமார் கந்தர்வர்சித்தர்களும்
வருணன்குபேரன் வாயுவோ டக்கினியும்
எமனுடனே இந்திரன் ஏற்றபல்பத்திரனும்

அஷ்டதிக்குப்பாலர் அருக்கனெடு சந்திரனும்
நக்ஷத்திரங்கள் நவக்ரஹங்கள் உள்ளவெல்லாம்
ஏகாதச ருத்திரர்களும் எண்ணிறத்த தேவர்களும்
மத்வாதச ஆதிதயர் தாமுதித்து வந்தாற்போல

பரவாசுதேவருமாய் நின்ருர் பரிபூரணர்
சல்யர்பீஷ்மர் த்ரோணர் கிருபாசாரியரும்
அஸ்வத்தாமா கர்ணன் அத்தனேகௌரவரும்
துர்யோதனன்சகுனி தம்பிகள் எல்லோரும்

அண்டமெல்லாமுண்ட யசோதைமகன் கையாலே
கண்டதுண்டமாகவிழக்கண்டானே அர்ஜுனனும்
தேசதேசத்திலுள்ள ராஜராஜாக்களெல்லாம்
பக்ஷிகளைப்போலப் பறந்துதிரிந்தோடிவந்து

விளக்கொட்டிப் பூச்சியைப்போல் விழக்கண்டான் அர்ஜுன
நறநறவெனப்பற்கடித்து நசுங்குவதைப்பார்த்திருந்தான் [னும்
மிருத்யுவைபோல விழுங்குவதைப் பார்த்திருந்தான்
ப்ரளயருத்ரனேவென்று பார்த்தே பயந்திருந்தான்

பார்த்தால்தெவிட்டாது(ஸ்வாமி) பாதாம்புஜத்தழகை
மார்க்கங்கள்காட்டும் மலரடியின் பொற்சிலம்பை
செம்பவளவாயழகைத் திவ்யபத்மமுகத்தை
திவ்யாபரணங்களின் திவ்யரத்ன காந்தியின்ன

கண்டபேர்கண்களுக்குக் கல்யாணம் பண்ணுமாப்போல்
பார்த்தேதிகைத்திருந்தான் பார்த்தனந்த அர்ஜுனனும்
ஆகாசமார்க்கத்தில் அநேக சிரஸுகளும்
அங்குமெங்கும் எம்பெருமான் திருமுக மண்டலங்கள்

மண்ணுண்டகனிவாயில் மாணிக்கம்போல் ஒளிவீச
அழகியபல் வெளிதோறும் ஆழிகடல்சூழ
திருக்கண்மலர் இரண்டாயிரம் திருச்செவிகள் இரண்டாயிரம்
நாஸிகை ஓராயிரமாம் நாக்குமோராயிரமாம்

திருவடிஇரண்டாயிரமாம் திருக்கைகள்இரண்டாயிரமாம்
படைமுகத்தில் பார்த்தனுக்கு எடுத்தம்புதொடுத்ததொரு
கைத்தலமும்
அர்ஜுனனுக்குத்தேரோட்டும் அற்புதமாங்காட்சியும்
உறங்கும்பாவனைபோல் சேஷன்மேல்பள்ளிகொள்ளும்!சாயலும்

ஸ்ரீதேவிபூதேவி கால் பிடிக்கும் காட்சியும்
ஆலிலைமேல் கண்வளரும் அச்சுதனார்தன்வடிவும்
தரணியும்விருக்ஷமும் தாங்கிநிற்கும் சேஷனுமாய்
பாதாளலோகத்தில் பாய்ந்தமலரடியும்

சங்க்ருஷ்ணன் ஸ்ரீகிருஷ்ணன் ப்ரத்யும்நன் சாம்பசிவம்
பராசக்திதேவியரும் பலவிதசக்திகளும்
படமாயிரமுடன் (ஆதிசேஷன்) பாதமலர் தாங்கிநிற்க
சுற்றும்விளக்கேற்றிவைத்து தூபதீபங்கள் பண்ணும்

அந்த மகிமைகண்டு ஆச்சரியப்பட்டிருந்தான்
அர்த்தசரீரத்தில் யமனுடனே இந்திரனும்
அநேகமுகங்களில் அக்நிஆகாசத்தில்பரவ
நாசமற்றலோகத்தில் நாதன்முடிதோன்றவும்

சிவனும் அயனும் ஹரியும் வேலாயுதரும்
மும்மூர்த்தி தேவர்களும் மூர்த்திகரித்தப்போ
செம்பொன்மகுடத்தில் தேவர் மலர்சொரிய
அந்தமகிமைதன்னை அர்ஜுனனும் பார்த்திருந்தான்

வைவஸ்வதமநுவுக்காக மஹாப்ரளயம்தனிலே
ஔஷதிகளுள்ளதெல்லாம் ஓடத்திலேற்றிவைத்து
மீன்ரூபமாய்வந்து முழுகாமல் காத்திருந்த
மத்ஸ்யாவதாரத்தைக் கண்டுமனமகிழ்ந்தான்

பாதாளலோகத்தில் பூமியும் தாழந்திருக்க
கொம்பினுலேதாங்கிக் கொண்டுவந்து ஸூகரமாய்
தரணியை ஸ்தாபித்து ஹிரண்யனை ஸம்ஹரித்து
வராகவதாரத்தைக் கண்டு மனமகிழ்ந்தான்

அமிர்தங்கடையும்போது அதிசயரூபத்துடன்
தானுமங்கே கூடவந்து வானவர்க்குதவிசெய்து
கூர்மாவதாரத்தால் கூடக்கடைந்தெடுத்து
தன்வந்தரியாகத் தானமிர்தங்கொண்டு

அமரர்களுக்கெல்லாம் அமிர்தங்கொடுத்தபின்பு
அசுரர்களுக்கெல்லாம் அதிமோகினியாயிருந்த
அழகிய ரூபங்கொண்டு ஆச்சரியப்பட்டிருந்தான்
திருப்பாற்கடல்தனிலே சேஷன்மேல் பள்ளிகொள்ளும்

ஸ்ரீஹரியைத்தேடி தேவரெல்லாம் போற்றிநிற்க
அப்போதவதரித்து அசுரர்குலம் வேரறுத்து
துஷ்டஹிரண்யகசிபுவைத் தூண்பிளந்து சங்கரித்து
மார்பிளந்துமாலையிட்டு மடிதனிலே வைத்திருந்த

நரஸிம்ம அவதாரத்தைக் கண்டுமனமகிழ்ந்தான்
வாமனமூர்த்தியுமாய் வையகம் அளக்கவென்று
பூமிபதியான பலிச்சக்ரவர்த்தியின்
யக்ஞசாலைவந்து மூன்றடிமண் தான்கேட்டு

அத்யந்தபக்தியுடன் அப்போது மஹாபலியும்
தானமதுபண்ணவந்தான் தடுத்தாரே சுக்கிரனும்
கொடுத்தாரே பூமிதானம் குருசொல்லைக்கேளாமல்
ஓரடியாக உலகமெல்லாம் தானளந்து

மூன்றடிக்குக்காணுமல் வஞ்சனையால் மஹாபலியை
பாதாளலோகத்தில் பாய்ந்துவிழத்தள்ளிவிட்டார்
வாமனமூர்த்தி மகிமைகண்டான்பாத்தனப்போ
சூரபராக்ரமராய் ஜமதக்னிமைந்தருமாய்

பாருலகந்தன்னில் பரசுராமரென்ற கீர்த்தியுமாய்
தனுஸு வில்லு தானெடுத்து க்ஷத்திரியகுலம் வேரறுத்து
கார்த்தவீர்யார்ஜுனனைக் கண்டதுண்டமாக்கிவைத்த
பரசுராமாவதாரத்தைக் கண்டுமனமகிழ்ந்தான்

விச்வபதியாக விளங்கும் தசரதர்க்கு
மைந்தராய் அவதரித்து த்ரைலோக்ய அதிபதியாய்
தவமுனியின்பின்தொடர்ந்து தாடகைதனைவதைத்து
அகல்யை சாபந்தீர்த்து அரனுடைய வில்முறித்து

ஜானகிக்கு மாலையிட்டு பரசுராமர் மதமடக்கி
வந்துமந்த அயோத்தியிலே மணிமகுடம் சூட்டவென்று
அன்புடனேதந்தை அபிஷேகம் பண்ணவென்று
தாய்சொல்லைக்கேட்டு வனவாஸம் போய்நடந்து

பரத்வாஜ ஆச்ரமத்தில் பரிவுடனே தங்கிச்சென்று
சித்ரகூடத்தில்வந்து ஸீதையுடனேயிருந்து
பரதன்வந்துஅடிபணிய பாதுகையைத்தான்கொடுத்து
பஞ்சவடிஆச்ரமத்தில் வந்து பரிவுடனே

சூர்ப்பனகைமூக்கறுத்துக் கரதூஷணனேவதைத்து
மாயமானின்பின்சென்று வைதேகிதனேயிழந்து
கண்டஜடாயுவுக்குக் கைவல்யமுங்கொடுத்து
கபந்தன்முடியரிஞ்சு கானகமெல்லாம்திரிஞ்சு

சபரிகண்டு பூஜைபண்ண ஸந்தோஷமாய்ப் பூஜித்து
அஞ்சனதேவிமைந்தன் வந்து அடிபணிய
ஸுக்ரீவனுெடுகலந்து ஸக்கியம் செய்துகொண்டு
வாலிவதம் பண்ணிவிட்டு வானரஸேனேயுடன்

கபிராஜனுெடுவந்து கடலடைத்து அணேகட்டு
கும்பகர்ணன் இந்திரஜித்தும் கூடமடியவைத்து
ஸேனேதளத்தோட தசமுகனே ஸம்ஹரித்து
பரிவுடனே வபீஷணர்க்குப் பட்டாபிஷேகம்செய்து

ஜனகர்மகள்மைதிலியும் செந்தணலிற்பாய அப்போ
ஸீதையை அக்நியும் ஸ்ரீராமர்முன் கொண்டுவந்தார்
கொம்பனேயாள் ஜானகியைக் கூட்டிவந்து புஷ்பகத்தில்
லிங்கபிரதிஷ்டைபண்ணி நிர்மலமாம் ஸேதுவிலே

பரத்வாஜர் ஆச்ரமத்தில் பரிவுடனேபுசித்து
தம்பிபரதன்வந்து தன்னடியின் கீழ்ப்பணிய
அடிபணிந்தபரதனே அப்போமடியில்வைத்து
வஸிஷ்டர் ஸுமந்திரர் மாதாக்களேயும்பணிந்து

திரும்பிவந்து அயோத்தியிலே செம்பொன்முடிகொண்ட
பட்டாபிராமன் மகிமைகண்டான் அர்ஜுனனும்
வஸுதேவர்தேவகிக்கு மைந்தருமாய் யதுகுலத்தில்
தேவகியின் திருவயிற்றில் செல்வக்குமாரனுமாய்

வந்துதித்துத்தேவகிக்கு மாயாரூபங்காட்டி
கம்ஸனெனும் அம்மானைக்காணுமல் அண்ணனுடன்
கோகுலத்திலேவளர்ந்து கொன்ருழித்துப்பூதகியை
சகடாசுரனை உதைத்து வதம்செய்து

கேசரிஷபாசுரனைக் கிட்டும்பகாசுரனை
பகாசுரன்மூக்கைப் பிடித்துக்கிழித்தெறிந்து
இடைச்சேரிதன்னில்வந்து எடுத்துவெண்ணெய்பாலுண்டு
கோபாலருடனே கூடிவிளையாடி

வந்துபசுமேய்க்கலுமே நான்முகனும்கொண்டொளிக்க
கோக்களை ஸ்ருஷ்டித்து கோவிந்தர் பசுமேய்க்க
விஷஜலம் குடித்துப்பசு விண்ணுலகம் போய்டைய
காளகூடவிஷத்தைக் கடுகெனவே மாற்றவென்று

காளிங்கன்படமதிலே காலால்மிதித்தேறி
காளிங்கனைத்துரத்திக் கடுகிஇங்கே ஓடிவந்து
நந்தருக்கும் யசோதைக்கும் நடுக்கமது தீர்த்துவைத்து
கூத்தாடி வேடிக்கையாய்க் கோவர்த்தனம் எடுத்து

குடையாகத்தான்பிடித்து ஏழுநாள் மழைதடுத்து
பத்தினிமார்அன்னம் பரிவுடனேதான்புஜித்து
ப்ருந்தாவனத்தில்வந்து வேணுகானங்கள்பண்ணி
கோபிகைகள் எல்லோரும் கூட்டமாய் ஓடிவர

ஜலக்ரீடை பண்ணும்போது சேலைகளை ஒளித்து *(அவர்)*
வந்துகரம்கூப்பிநிற்க வஸ்திரங்கொடுத்தபின்பு
அண்ணன் பலராமருடன் அழகாய் மதுரைவந்து
குவலயாபீடத்தைக் கொன்றிழுத்து லீலைபண்ணி

சாணூரன் முஷ்டிகளைச் சாகவிழவிடித்து
கம்ஸனின் வீரியம்போல் காசியினிற் கண்டதில்லை
ஈரேழுலோகம் இடிவிழுந்து மேல்குதித்து
மாமனைக்கொன்று மதுரையில் விளங்கிநின்ருர்

கிருஷ்ணுவதாரத்தைக் கண்டுமனமகிழ்ந்தான்
அங்கங்கேபூமியில் அசுரர்கள்அதிகப்பட
அப்போது பூமிக்கு ஆதிபாரமாகிவிட
பொற்கொடியாள்பூமியந்த பாரம்பொறுக்காமல்

தர்மமும்ஸத்யமும் ஸாத்வீகருமுடனே
தர்மத்தைரக்ஷித்து ஸ்தாபிக்கவேணுமென்று
புத்தராகப்பிறந்து பூமியைரக்ஷித்த
பௌத்தாவதாரத்தைக்கண்டுமனமகிழ்ந்தான்

பூர்ணஸ்வரூபமாய் புவனமெல்லாம் தான்நிறைந்து
ஸ்ருஷ்டி ஸதிதிலயம் சின்மயானந்தவஸ்து
காரணத்துமெய்ப்பொருளாய் கல்கிஸ்வரூபமாய்
கல்கிஅவதாரத்தைக்கண்டு மனமகிழ்ந்தான்

ஆகமவேதம் அறுபத்துநான்குகலைகள்
அஷ்டாதசபுராணம் அத்வைத சாஸ்திரங்கள்
ஹயக்ரீவமூர்த்தியின் அவதாரமகிமையினுல்
வேதசாஸ்திரமெல்லாம் விளங்கிற்றவரைத்துதிக்க

தசாவதாரமெடுத்து ஜகத்தையெல்லாம் ரக்ஷித்த
அநேக அவதாரங்கள் கண்டுமகிழ்ந்தான்
ப்ரகிருதிபுருஷருமாய் ப்ரபஞ்சசிருஷ்டிகாரணராய்
விச்வரூபத்தாலே விளங்கப்ரபஞ்சமெல்லாம்

பரபிர்ம்மமூர்த்தியின் மகிமைகண்டான் பார்த்தனப்போ
பாண்டவர்தூதனுமாய்ப் பார்த்தனுக்கு ஸாரதியாய்
தேர்த்தட்டின்மேலிருந்து ஸேனைகளெல்லாம்பார்த்து
பற்கடித்துக்கோபத்துடன் பாரதயுத்தம் பண்ணுவதேன்

இட்டதொருநாமம் ஏழுலோகஜோதிமின்ன
ஸாரத்யம்பண்ணுவதேன் தான்ஜயித்துநிற்பதையும்
பார்த்தேதிகைத்திருந்தான் பார்த்தனுமர்ஜுனனும்
ஜனனமரணமற்றேன் தேகபந்தம்தாளெழிந்தேன்

அக்ஞான ஆபரணம் நிக்ஷேபம்தாஞெழித்தேன்
நித்யசுத்தனுனேன் மோக்ஷபதம் நானடைந்தேன்
அதனைமகனென்றுநான் அவமதித்துப்பேசிவிட்டேன்
அம்மாஞ்சி என்று அலக்ஷியம் பண்ணிவிட்டேன்

மைத்துனன்முறையாலே வளம்பேசி நானுரைத்தேன்
விஷ்ணுவே உன்மகிமை விச்வரூபம் கண்டேனேயா
இவ்வளவுபோதுமையா எங்கள்குலம்ஈடேற (என்று)
பட்டாடைகள்தாழப் பணிந்துநமஸ்கரித்தான்

எடுத்தவொருவிசுவரூபம் எல்லாமடக்கிக்கொண்டு
முன்வடிவுகாட்டியென்றன் மோகத்தைப் போக்கிவைத்து
சதுர்புஜாாய்ச்சக்ரத்துடன் தரிசனம் தந்தருளும் (என்)
பொற்கடகக்கைகூப்பிப் பூந்தேரில் சாய்ந்திருந்தான்

அப்போது பகவானும் அடக்கினுர் வடிவமெல்லாம்
எப்போதும்போலக் கிருஷ்ணனுகவேயிருந்து
அர்ஜுனனேத்தேற்றி ஆத்மஞானமுறைத்தார்
நீராழிப்பொய்கையிலே நீர்க்குமிழிவாழ்வுபோல

நித்யம் செய்வதெல்லாம் சுத்தப்பொய்தானென்று
கண்டுகொள்காரணத்தை விஜயா கலங்காதே
தண்டெடுகௌரவர்கள் படைகள்திடுக்கிடவே
கொண்டாடிக்காண்டீபம் கூசாமல் நாணேற்றி

வில்லெடுத்துவீரா விஜயா எழுந்திரென்ருர்
துகிலுடையசுவரதிலே தோய்த்தெழுதினுற்போல
மண்ணுலகில்வாழும் மனுஷ்யாதியானவர்க்கு
தலையிலெழுத்தற்றவர்க்குச் சாகுங்காலம்வந்துவிட்டால்

வாதமென்றும் பித்தமென்றும் வகுத்தும்நோக்காடென்றும்
வெடுப்பென்றும் வேறுசில ஹேதுகரம்போலப்
படைக்குவிஜயன்கொன்ருன் என்றுன்னேத்தான்வைத்து
நானுகக்கொல்லுகிறேன் நம்பாதே நீயுமிப்போ(இது)

என்மாயம்காணும் எழில்விஜயா நீகேளு
போர்க்களத்தில் பூபாரம் தீர்க்கவந்தகாரணத்தால்
மண்ணுலகில் வஸுதேவர்(உன்) மாமன் மகனுகவந்தேன்
அல்லிக்குளத்துநீர் அடிமடியிற்பாற்பாய்ந்தாற்போல்

உன்னைக்கொண்டுபடைக்கு உற்றதுணைசெய்யவென்று
குருகுலத்திலேயிருக்கும் குருஸேனையத்தனையும்
(சற்றும்) தாமதமில்லாமல் ஸம்ஹரிக்கவேண்டியதால்
ஸந்தேகமில்லாமல் ஜடுதியாய்க் காண்டீபம்

வில்லெடுத்துவீரா விஜயா எழுந்திரென்ருர்
சத்ருக்களைக்கொன்று கீர்த்தியுடனேயிருந்து
புவனத்தை ஐவராண்டு பூபாரம் தீர்க்கவென்றும்
பரமஹம்ஸர்பக்தர் பழுதற்றஞானியர்கள்

திடமாகவேணுமென்றும் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியப்போ
பகவான் தம்வாக்காலே பதினெட்டு அத்யாயம்
உபதேசம் பண்ணவென்று உத்தேசம் தோழருக்கு
மாதுடையமார்பன் மந்தஹாஸத்துடன்

ஆதரவாய் மைத்துனனை அன்போடெடுத்தணைத்து
ஆதரவாய் மைத்துனர்க்கு ஆத்மஞானம் உரைத்தான்
பக்தியோகமானவிந்தப் பாருலகதர்மமெலாம்
சோகமோகமற்றிருக்கும் சித்தசுத்தியுண்டாக்கும்

மோகத்தைமாற்றிவைக்கும் மோக்ஷபதமானதர்மம்
பக்தியுடனெனைப்பணிந்து பக்திசெய்வோருக்கு
நித்யனென்றென்னை நினைத்துபக்திசெய்வோருக்கு
ஸர்வப்பிராணியையும் ஸமமாகபாவிக்கும்

என்னுடையப்ரியபக்தன் என்னையேவந்தடைவான்
க்ஷேத்ரக்ஞனுயிருப்பேன் க்ஷேத்ரமாம் தேகமதில்
அந்தணர்கள்தம்மனையில் அர்ச்சிக்கும் பூஜையிலே
தங்கள் ஹிருதயந்தன்னில் ஆத்மதேவதையாய்

எங்குமாய் நானிருப்பேன் எல்லா ஹிருதயத்திலும்
எங்கெங்கும் என்முகங்கள் எங்குமென் கண்கரங்கள்
திருப்பாதம்வாய்களுடன் எங்குமென்திருச்செவிகள்
எங்கும் நிறைந்திருக்கும் என்னுடையரூபமது

ஏகமயமானபிருஹ்மம் எங்குமதாய்வியாபித்து
ஒன்றிலும் ஒட்டாமல் இருக்குமென் பிருஹ்மமென்றார்
உலகளந்தமாதவனார் ஊர்த்தமூல அத்யாயம்
தமியேன்நான் விஸ்தரிக்க ஸரஸ்வதியே முன்னடவும்

கருணையுள்ளஸ்ரீகிருஷ்ணன் கண்ணனமைத்துனர்க்கு
தயவுடனேபார்த்து திருவுள்ளம் செப்பினது
அதிசூரவீரியனே அத்தானே நீகேளு
விஷமானஸம்ஸாரம் விருக்ஷமூலமாயிருக்கும்

மேல்நோக்கி வேர்இழந்து விச்வமெல்லாம்வியாபிக்கும்
அச்வத்தமாக அசையாமலேயிருக்கும்
பஞ்சபூதமானகொப்பு பார்க்கச்சிறுத்திருக்கும்
ஸப்தாதிவிஷயங்கள் ஆனசிறுகொப்பு

சுற்றிலும் சூழ்ந்துகொண்டு சோபையுடனேயிருக்கும்
வேதங்களானஇலை வெகுசாயையாய்த்தழைக்கும்
விஷயாதிபோகங்கள் மேல்துளிர்தான் துளிர்க்கும்
தர்மம்அதர்மமென்ற தாக்குடைய பூ பூக்கும்

மானபிமானமென்ற வடுக்கள்அதுவெடுக்கும்
காமக்ரோதமென்ற காய்களதுதான் காய்க்கும்
அக்ஞானமானகாய் ஆதரவாய்க் காய்த்திருக்கும்
சுகதுக்கமானபழம் சோபையுடனேபழுக்கும்

இப்படிப்பட்டவிருக்ஷம் இருக்கஸ்தலமற்று
நச்வரமாக அரைக்ஷணத்தில் போய்விடுமாம்
போனாலும்சாகாது புனர்ஜன்மமாய்த் திரும்பிவரும்
ஜனனமரணமென்று திரும்பிவிடும் ஜீவாத்மா

ஆதியிலேஉண்டான அவிவேகமாயைதன்னை
அஸத்தெனவே எண்ணி அதிலாசைவைக்காமல்
(அதை) மித்தை என்று பார்க்கிறவன் வேதவித்துகா ணுமவன்
மைத்துனனே எங்கள் வாஞ்சையான உயிர்த்தோழா

(ஒரு) விருத்தாந்தம் சொல்லுகிறேன் விருப்பமுடனேகேளு
ஸம்ஸாரவிருக்ஷம்வெகு சாகையாகவேபெருத்து
மேல்லோகம்கீழ்லோகம் சேரவேதான்மறைத்து
சேஷமறைத்துச் சிறுதுளிர்தான் துளிர்த்து

குணங்களெல்லாம்வர்த்திச்சுக்கொள்ள வெள்ளம்போலே
திரும்பிவிஷயபோகம் சிறுபூக்கள்தான்பூத்து
ஜகந்தன்னிலே மானிடர்கள் செய்துவரும் கருமமெல்லாம்
ஈரேழுலகங்களில் எங்கும்வியாபித்து

துக்கஸுகங்களெல்லாம் சூழ்ந்துவருமளவில்
திக்விஜயம்பண்ணும் சிலைவீஜயா நீகேளு
(அதற்கு) ஆதியந்தமில்லை அளவில்லைரூபமில்லை
வெகுஜன்மவாசனையால் வெகுசாகைவேரோடி

வைரமதுபாய்ந்து மாளாதொருநாளும்
மாளாது என்று மனஸிலே எண்ணுதே
மஹாத்துக்கள்சேவையினுல் மனந்துலங்கிநன்மையுண்டாம்
ஆசார்யர்கிருபையாலே அந்தரங்கநிஷ்டைபண்ணி

ஸந்ததமும் சிந்தித்து ஜீவவிசாரங்கள்பண்ணி
விஷயத்திலே மனஸை விடாமல் நிறுத்தி
வேதாந்த விருத்தாந்தம் விசாரித்தெப்போது
மோக்ஷ இச்சையுண்டாகி மீண்டும் இதைத்தேடாமல்

கோசவிலக்ஷணராய் குணத்துக்கு அதீதருமாய்
சரீரத்துக்குள்பின்னலுமாய் சச்சிதானந்தரூபமாய்
அவஸ்தைக்குச் சாக்ஷியுமாய் அப்புரப்பட்டவராய்
இந்திரியஅகோசரராய் எங்கும்நிறைந்தவராய்

ப்ரகாசிக்கும் வஸ்துவமாயப் பரிபூர்ணமானவரை
விசாரித்தறிந்து விபரீதமில்லாமல்
அசங்கை என்ற அஸ்திரத்தால் அடியோடேவேர் அறுத்து
அநர்த்தம் நிவர்த்தியதாய் ஆநந்தப்பிராப்தியுண்டாம்

அசேதனமான விருக்ஷம் சிதல்சிதலாய்போய்விடும்காண்
புதுஜாதனைச்சிந்தித்து இனிஜன்மமில்லையென்று
மகளும் அந்தஜன்மம் என்றுவிசாரமற்று
நீதியுள்ள மஹாத்மாவின் நிஷ்டைசொல்வேன் நீகேளு

மாநபிமானமற்று மண்ணுலகத்தாசையற்று
துர்ஜனசங்கம்விட்டுச் சொல்லரிய அத்வைதம்
நித்யமும்பண்ணி நிஷ்காமமாயிருந்தால்
பந்தமற்றமூக்தனவன் ஸுகதுக்கமில்லாமல்

ஆசாபாசமற்று அமோகமாயிருந்து
கலியுகத்துக்கம்விட்டு ஸமாதிஆச்ரமம்போய்
கருணையுடன் காணுமிந்த காட்சியுள்ளயோகமது
இகபரமென்று எள்அளவும் ஆசையற்று

ஸகலகர்மம்வெறுத்து சீதோஷ்ணம்தான் ஸகித்து
ஸத்குருவின்பாதத்தை ஸந்ததமும் சிந்தைபண்ணி
ஏஷணங்கள்ராக த்வேஷங்களில்லாமல்
தேகத்ரயங்களினல் ஸர்வாபிமானம்விட்டு

தேகமதில்மோஹம்மத மாற்சரியம் அகங்காரம்
சேரமறந்து ஜெகத்திலுள்ளோர் பீதியற்று
எப்போதுமென்னை ஹிருதயத்திலேநினைத்து
தமதம்சம் உள்ளவர்க்கு நாசமொருநாளுமில்லை

என்றுகூறிமகிழ்ந்து கிருபைகொண்டார் மாதவனர்
ஸ்ரீமலர்ந்தகண்ணனுமாய் ஜகந்தனிலே உண்டாய்
மனஸுடனே ஆறுஇந்திரிய சாக்ஷியுமாய்
பிரக்ருதியுடனேகூடி இந்திரியபேதகராயிருந்த

தாமும் ஒரு அம்சருமாய் ஸகலர்க்கும் கர்த்தருமாய்
அம்சமென்றுசொல்ல சங்கைவரக்கூடாது
அதற்குஉதாரணம்நான் அடைவாகசொல்லுகிறேன்
ஆகாசத்திலிருக்கும் ஆதித்யர் ஏகரன்றோ

படங்கள்படங்கள்தோறும் காணுகிற ஆதித்யன்
திரளாகஆதித்யன் சேர்ந்துதயமானாற்போல்
கலக்கமுள்ள மனஸுடனே காணுகிறபேர்களுக்கு
ஆதித்யர் ஒருவர் அல்லார் அநேகருண்டோ அவனிதனில்

பிம்பம்தெரியுல்தண்ணீரில் வேறுபிம்பம்உண்டோதான்
ப்ரதிபிம்பத்தோடே(சற்றும்)பற்றுண்டோபாஸ்கரருக்கு
அப்படிபோலே அவித்தையுடனேகூடி
ஜீவனென்றும் மாயையென்றும்ஆத்மாவே ஈசனென்றும்

ஸ்தாவரஜங்கமமென்றும் ஸஞ்சாரவஸ்துவென்றும்
ஜாதிபேதம் வேறேஎன்றும் தான்விதமாய்க்கற்பித்து
தன்கழுத்திலாபரணம் தான்தேடும் பிராந்தனைப்போல்
ஸத்ஸங்கமில்லாத ஸம்ஸாரத்தில் உழன்று (இது)

நித்யமென்றெண்ணி நினைத்திருக்கும் மூடருக்கு
அறிவுகெட்ட அக்ஞானிக்கு அநேகவிதமாய்த்தோன்றும்
தெளிந்த ஞானியர்க்குச் சிந்மயமாய்த்தோன்றும்
நேசமுள்ளதோழனே நிகரற்ற மைத்துனனே

ஏதென்றுசொல்லி ஹிருதயத்திலெண்ணுதே (என்று)
ஆதரவாய்ப் பார்த்தனுக்கு அருள்செய்தார் அச்சுதனார்
தேஹமதனில் வசிக்கும் தேஹியாம் ஈச்வரன்நான்
ஜீவனை அறியாத தேஹமே நானென்றெண்ணி

புத்ரன் பௌத்ரன்என்று கண்டதேல்லாம் மேல்போட்டு
கர்மத்தைப்பண்ணி களிப்புடனே திரிந்து
சரீரம்விழும்போது சாணரைப்பான்பூச்சியைப்போல்
வேறே ஒருதேஹத்தில் சென்றுபற்றும்ஜீவாத்மா

ஜீவனும்கோழையும் சேரவேஅங்கிழுக்க
கொண்டுசுழித்துக் குழலுதிவாங்கறத்தே
இந்தவிதமென்று எண்ணத்தெரியாதே
புஷ்பம்க்ரஹிக்காமல் மணம்க்ரஹிக்கும் வாயுவைப்போல்

அப்படிப்போல அதிசூக்ஷ்மமாய் நானிருப்பேன்
பஞ்சேந்திரியங்களினுல் வியாபித்ததேஹத்தில்
அநர்த்தமானஸம்ஸார அல்லல் ஒழியுமட்டும்
பொடுக்கெனவேவிழுந்து போறதுபார்த்திருந்து

வித்தையைநம்பி விஷயபோகம் பூஜித்து
சண்டையிடும் முக்குணமும் சரீரத்தில் ஏஷணமும்
ஸத்விகம்ராஜஸமும் தாமஸமாம் முக்குணமும்
க்ஷணத்தில்நசித்துவிடும் தான்பொய்யாய்விடும்

வளைத்துவளைத்துவரும் (என்) மாயாஸ்வரூபமது
எனக்குற்றஜன்மம் எண்ணித்தொலையாது (என்)
அவதார மகிமைகளை அறியாமல் துதியாமல்
தேகமொடுபோகம் ஸ்திரமென்றிருக்கிறவன்

மூடனவன்மூடனவன் முழுதும்ஞானியவன்
ஞானசக்ஷுஃதான்விளங்கி நன்ருயெனையறிந்து
மோஹம்விட்டுப்பார்க்கிறிவன் மோஹஸ்வரூபனன்று
தரணீதரனப்போ தனஞ்செயனுக்கோதி நின்ருர்

ஸமர்த்தனும் அத்வைதி தன்னுடையத்தனத்தால்
தத்வார்த்தங்க்ரஹிக்கத் தானேச்ரமப்பட்டாலும்
ஆசார்யர் அன்றியிலே அறிவும் தோணுது
மனந்திடமாகாது வந்தாலும்நில்லாது

ச்ரவணபலத்தாலும் சற்றுமுண்டு புண்ணியங்கள்
(என்)சகலதர்மங்களையும் தமக்குடைய மைத்துனர்க்கு
உலகளந்தமாதவரும் உபதேசம் பண்ணிவைத்தார்
ஐவகைக்குப்பிருஹ்மம் ஐவகையும்நாந்தாமே

புவனத்தையாளும் புருஷோத்தமன்நானே
இந்தப்படிக்கு ஏகமும்நாமாகி
அந்தரர்போற்றும் அழியாப்பொருளென்றும்
ஹரியாகநம்மை அறிந்து துதிசெய்தவர்கள்

தர்மத்தினுலும் தசேந்திரியங்கள் தன்னுலும்
காமத்தினுலே செய்துவரும் தர்மமெல்லாம்
நடுவில்குறையாதே நம்மைவந்தடைவார்கள்(என்)
கிருபையைபெறுவார்கள் கீர்த்தியாய் மகாத்மாக்கள்

ப்ரக்ருதியுடன்நான்கூடிப் ப்ரபஞ்சச்ருஷ்டிசெய்யுகிறேன்
மகிமையுடன் பூமியிலே வந்துப்ரவேசித்து
அதிகபலத்தாலும் அவனிபதினுலும்
சத்திரஸூரியர் ஜலம் தாமாகஉண்டாக்கி

ஸரஸ்வரூபனுன சந்திரனுய் நானிருந்து
ஓஷதிகள் பயிர்களையும் உண்டாகப் பண்ணிவைத்து
ப்ராணிகளின்தேஹத்தில் அக்னியாய் நானிருந்து
பசிதாகமுண்டாக்கி பிராணிகளுக்குள் ப்ராணனுமாய்

சதுர்வித அன்னமும் ஷட்ரஸபோஜனமும்
ருசிபார்த்துப் பூஜிக்கிறதும் உள்ளிருந்துநான்தானே
இருக்கநடக்க எழுந்திருக்கத்தானுேட
கருத்திலிருக்கிறதும் நானென்று அறிந்துகொண்டு

சச்சிதாநந்தரூபமாய் ஸகலருக்குங் கர்த்தருமாய்
அறிவுடனே ஸாக்ஷியுமாய் அக்ஞானமற்றவராய்
ஸகலதர்மவேதாந்த ஸத்கர்மசாஸ்திரங்கள்
மகிமையுடன்வந்துரைக்கும் மஹாத்மாவும் நான்தானே

(என்று)உத்தம பார்த்தனுக்கு உபதேசம் பண்ணிவைத்தார்
பாருலகில் ஒருநல்ல ப்ரகிருதியுடனேகூடி
வ்யாபித்துலகமதில் வந்துப்ரவேசித்து
நித்யமநித்யமென இரண்டுபுருஷருண்டு

அநித்யவஸ்து இன்னதென்று அடைவாகச் சொல்லுகிறேன்
தேவதைகள் மனிதர் தருக்கள் பசுபக்ஷம்ருகம்
பஞ்சபூதத்தாலே பண்ணப்படுவதெல்லாம்
பண்ணப்படுவதெல்லாம் பார்த்திருக்கவே நசிக்கும்

நாசமதுநாசமது இரண்டில் ஒருபுருஷர்
அகண்டவெளியானவராய் ஆத்மஸ்வரூபமாய்
இரக்ஷிக்கும் கர்த்தருமாய் எல்லோர்க்குமீசருமாய்
நித்யஸவரூபரான நித்யர்க்கு நாசமில்லை என்று

ப்ரும்மஞானம்வந்தால் பின்னவர்க்கு ஜன்மமில்லை என்று
மகிமைபெரிதுடைய மாதவனந்தானுரைத்தான்
அசையாமனஸுடைய அர்ஜுனமஹாராஜா
ரணகளத்துச்சூரா ரத்னக்ரீட நீ கேளு

மநுவுக்குநான்பயந்து வந்துனக்குச்சொல்லவில்லை
மாலையொடுமாணிக்கம் மட்டற்றஆபரணம்
ஐச்வர்யமுள்ளதெல்லாம் ஐவர்தருவாரென்று
அதிலே எனக்குச்சற்றும் ஆசையென்று எண்ணாதே

உடுபுடவை உச்சிதங்கள் வாங்கவென்றுசொல்லவில்லை
உலகாளும் பார்த்தனுக்கு உபதேசங்கள் பண்ணி
அதிலெனக்குக்கீர்த்தி வேணுமென்று சொல்லவில்லை
வெகுதூரம்போய்நடந்து வாய்வலிக்கக் கால்வலிக்க

துரியோதனனிடத்தில் தூதுபோகக் காரியமேன்
ஏதுமறியாதவர்போல் ஏவல்தனம்செய்து
குதிரைக்கயிறுபிடித்து கோச்சுவண்டியிலிருத்து
ஸாரநியாயுந்தனுக்குத் தேர்விடக்காரியமேன்(என்று)

பரிகாசமாக என்னைப் பார்த்தா நீகேட்டால்
பலகாலம்வேண்டியன்றோ பக்தருக்காகஇப்போ
அவதாரலீலைகளை அற்புதமாய் பண்ணிவந்தேன்
கதிநீதான் என்று பாதம் வந்தடைந்தவர்க்கு

அருள்செய்துரட்சித்து அபீஷ்டமெல்லாம்தந்து
பிறவாதமோக்ஷம் பின்னவர்க்கு நான்கொடுப்பேன்
அத்யந்த பக்தனுமாய் அங்கத்திற்பாதியுமாய்
அத்தையின் பிள்ளையுமாய் அந்தரங்க மைத்துனனாய்

நித்யசித்திபக்திமுக்தி நித்யகர்மங்களெல்லாம்
தப்பாமல்பண்ணிவரும் சற்குணனே நான்உனக்கு
ஒருவரும்கேட்காத உண்மைரஹஸ்யங்கள்
உத்தமன் என்று உனக்கே நானுரைத்தேன்

வெட்டவெளியாக வெளிப்படையாய் நானுரைத்தேன்
(இதை) சித்தத்திற்கொண்டு தொந்தங்கள் வாராமல்
சத்ருக்களைக்கொன்று சாமர்த்யவீரனுமாய்
யுத்தத்தில்நின்று இளைப்பாறியே ஜயிப்பாய் (என்று)

கட்டுமட்டாய்ப் பார்த்தனுக்குக் கார்மேகவண்ணர் சொன்னார்
ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியின் ஸ்ரீகீதாவாக்கியத்தை
அர்ஜுனனும்கேட்டு அக்ஞானம் மோஹம்விட்டு
மாதவனருளாலே மனதுதிட மாச்சுதென்று

பார்அளந்தார்சொன்னபடி பார்த்தனும் செய்வேனென்று
பாரதப்போர்முடிக்கப் பரிபூர்ணமனதாயிருந்தான்
வேதவ்யாஸர் அருளாலே வேதாந்த ஸாரந்தன்னை
கிருஷ்ணார்ஜுனஸம்வாதம் சஞ்சயனுந்தான்கேட்டு

மனதில் மகிழ்ச்சியுடன் திருதராஷ்டிரருக்குரைத்து
காண்டீபம்வில் தரித்த கட்டழகன் அர்ஜுனனும்
யோகங்களுக்கெல்லாம் யோகீச்வரரானவரும்
சேர்ந்திருக்குமிடந்தனிலே ஜயத்துடனே தனலட்சுமி

ஸந்தோஷமாய் வசிப்பள் ஸந்தேகமில்லையென்றார்
க்ருஷ்ணப்ரதாபம் கேட்டவுடன் முக்தியுண்டாம்
சுத்தமயமானஅவர் ஸ்வரூபத்திலேலயிப்பார்(இதை)
பக்தியுடன் கேட்டவர்கள் பவத்தைஅறுத்தெறிந்து

பரிசுத்தராகியபின் பரமபதம்தானடைவார்
ஸித்தமுள்ளவேதாந்தம் ஊர்த்தமூல அத்யாயம்
ஒன்றுகுறையாமல் உரைத்துத் தினந்தோறும்
பக்தியுடனேஜபித்து போஜனங்கள்பண்ணிவந்தால்

உத்தமமாமன்னத்தை உகந்தளித்த நன்மையுண்டு(என்)
நைவேத்ய அன்னமுண்டால் தோஷங்கள்வாராது
பட்னிஉபவாஸபலம் பகவானும் தான்கொடுப்பார்
ஸத்யமேஸத்யமே ஸந்தோஷங்கள் எண்ணுதே

அச்சுதானந்தர் அருள்செய்த வாக்யத்தைப்
பச்சையுமைபார்வதியும் பங்கஜன்தன் நாயகியும்
லக்ஷ்மியுங்கூட ஹிருதயத்திற்கொண்டு சட்டமதாய்
சேர்த்துத்தொடுத்ததொரு ஸாராம்ச மாலைதன்னை

அர்த்தம்தெரிந்து அனுபவிக்க வல்லாரே
எப்படிநான்சொன்னாலும் என்றன்பிழை பொருத்துக்
குற்றத்தைத்தள்ளி இதன்குணத்தை க்ரஹித்தருள்வீர்
பார்த்தனுக்குசாரதியாம் பகவானைப் போற்றுகிறேன்.

சுபம்

முற்றிற்று.

